திருவள்ளுவராண்டு 2035
வைகாசி ரூ. 3.50

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்





தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
யொல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |


சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**



அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

91/1

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2035 (தாரண) மாதம் : வைகாசி
மலர் : 16 இதழ் : 5

## பெண்ணிற் பெருந்தக்க யாவுள?

மே-9. உலக அன்னையர் தினமாகக் கொண்டாடப் படுகின்றது. உலக உறவுகளில் உன்னதமான புனிதமான மகத்தான உறவு தாயின் உறவு! தாய் தன் உயிரைத் தந்தே இன்னோர் உயிரை உலகுக்குத் தருகின்றாள்! மரணத்தின் உச்சத்திற்குச் சென்று தன் மறுபிறப்பில்தான் இன்னோர் உயிரைப் பிரசவிக்கின்றாள். குருதிக்குளத்தில் குளித்து வந்த குழந்தைக்கு, குருதியைப் பாலாகத் தருபவளும் அவள்தான். "காக்கைக்குத் தன்குஞ்சும் பொன்குஞ்சு" என்பதைப் போலத் தன்குழந்தையின் பலவீனங்களோ, குறைகளோ அறியாதவள். இறைமைகூடத் தாய்மையாகப் போற்றப்படுகின்றது. "நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" என்று மணிவாசகப் பெருமான் போற்றுவார். தன் குழந்தைக்கு பசிப்பொழுது வந்துவிடுமே என்று வேளை அறிந்து நினைந்து ஊட்டுபவள்தான் உண்மைத் தாயாக - தாய்மார்களின் உன்னதமான உயர்ந்த இடத்தைப் பிடிக்கின்றாள். குழந்தையின் நோய்க்கு தாய் மருந்து உண்பாள். குழந்தைக்காகத் தாய் பத்தியம் கடைப்பிடிப்பாள்.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்பதே திருவள்ளுவப் பெருமான் கேள்வி. திருவள்ளுவப் பெருமான் வைக்கின்ற நிபந்தனை "கற்பு எனும் திண்மை உண்டாகப் பெறின்" என்பது, கற்பு என்பதற்கு என்ன விளக்கம்? கற்பு, காலத்திற்குக் காலம் மாறுபடுகின்றது. சமூகத்திற்குச் சமூகம் மாறுபடுகின்றது. எத்தனையோ வினாக்கள் நம்மை நோக்கி எழுகின்றன. ஐந்து ஆடவருடன் ஒரு பெண் வாழும் நிலையில்

பாரதத்துப் பாஞ்சாலி காட்டப்பட்டாள். ஒருவனோடு ஒருத்திதான் வாழ்க்கைநெறி என்று இராமகாதையில் சீதை சித்திரிக்கப்பட்டாள். இராமனின் தந்தை தசரதனுக்கோ ஆயிரக்கணக்கில் மனைவியர் எண்ணிக்கை என்று கூறப்படுகின்றது. பலமனைவியரை மணம்புரிந்து வாழும் சமூகத்திற்கு அறிவுறுத்தத்தான் கடவுள் மனித அவதாரமாக வந்து ஒருவனுக்கு ஒருத்தியாகத்தான் வாழவேண்டும் என்று நடையின் நின்று உயர் நாயகனாக இராமபிரான் வாழ்ந்து காட்டினாரோ? எது எப்படி இருந்தாலும் கற்பு என்பது உடல்சார்ந்தது மட்டும் அல்ல. மனம் சார்ந்ததும் கூட. கற்புடை மகளிர் பிறர் நெஞ்சுபுகார் என்பது பழந்தமிழ் வழக்கு.

"நட்புக்கும் கற்பு உண்டு" என்று இன்றையக் கவிஞர்கள் பாடுகின்றனர்.

காதலுக்குத் தானே கற்பு உண்டு!
நட்புக்குமா கற்பு உண்டு?

எந்த உறவிலும் உண்மையாக இருப்பதுதான் கற்பு நெறி! எந்த நிலையிலும் ஒருவருக்கு ஒருவர் நம்பிக்கையாக நல்லெண்ணத்துடன் வாழும் மாறாத நிலைதான் கற்புநெறி! கணவன், மனைவி உறவுக்கு மாத்திரம் அல்ல! எல்லா உறவுகளுக்கும் இது பொருந்தும்.

குரு- சீடர் உறவாக இருந்தாலும்
தோழமை உறவாக இருந்தாலும்
தொழிலாளி-முதலாளி உறவாக இருந்தாலும்
தந்தை-மகன் உறவாக இருந்தாலும்
அண்ணன்-தம்பி உறவாக இருந்தாலும்
தலைவன்-தொண்டன் உறவாக இருந்தாலும்

அனைத்துக்கும் இந்தக் கற்புநெறி பொதுவானது! மரத்திற்கு ஏற்றாற்போல நிறம் மாறும் பச்சோந்திக் குணம் இன்றி உறவில் உண்மையாக இருத்தலே கற்புநெறி!. இன்பக் காலத்தில் தன்னோடு வாழ்ந்துவிட்டு, துன்பம் வந்தபோது தன்னைவிட்டு விட்டுக் கண்ணகியோடு சென்ற கோவலனுக்கு மாதவிவரையும் திருமுகம், தலைவி தலைவனுக்கு வரையும் திருமுகமாய் இல்லாமல் சீடன் குருவுக்கு வரையும் விண்ணப்பம் போல் அமைந்திருந்தது. "அடிகள் முன்னர் யான்அடி வீழ்ந்தேன்" என்று தொடங்கும் திருமுகத்தில் மாதவி கேட்ட கேள்வியால், கோவலன்

பாண்டிய அரசன் கொலை செய்யப்படும் முன்பே மனதால் இறந்து போயிருக்க வேண்டும். மனதால் இறந்துபோன- உயிர் இழந்த உடலுக்குத்தான் (நடைபிணத்துக்குத்தான்) பாண்டிய அரசு தண்டனை நிறைவேற்றியது. மாதவி கேட்ட கேள்வி, "நான் குலப்பிறப்பாட்டியாகப் பிறக்காத ஒரே காரணத்தால்தானே உன்னோடு துன்பத்தைப் பகிர்ந்து கொள்ள என்னை உடன் அழைத்துச் செல்லவில்லை. பிறப்பு என்ற ஒன்றைத்தவிர வேறு எந்தக்குறை என்னிடம் இருந்தது?" என்று சொல்லாமல் சொல்கின்றகேள்வியால், கோவலனை மாத்திரம் அல்ல. அவன் வாழ்ந்த காலத்தின் சமூகத்தையும் சுட்டுப்பொசுக்கினாள்!. கண்ணகி அநீதி இழைத்த அரசைச் சுட்டுப்பொசுக்கினாள். மாதவியோ சாதியைத் தாங்கிப்பிடிக்கும்- பெண்மையை இழிவுபடுத்தும் சமூகத்தைச் சுட்டுப் பொசுக்கினாள்.

பெண்மையை விற்கும் பொருளாகக் கருதுகின்ற சமூகத்தின் போக்கில் ஆயிரம் கழஞ்சு பொன்னுக்குக் கூவி ஏலம் போட்டு விற்கப்பட்ட மாதவி, அன்றைய சமுதாயத்திற்குக் கொடுக்கின்ற சவுக்கடிதான்!. கோவலனுக்குப் பிறந்த தம் குலக்கொழுந்தாம் மாதவம் செய்து பெற்ற மணிமேகலையை வண்ணச்சீறடி மண்மகள் அறியாதவள் என்று அடிமைப்பட்ட குடும்பப் பெண்ணாக ஆக்காமல், பெண்அடிமைத் தனத்தையும் முடைநாற்றம் வீசும் சாதியத்தையும் ஒருசேர வேரோடு பிடுங்கி எறிய, மாதவம் செய்து பெற்ற மணிமேகலையை, மாதவம் புரியும் பௌத்தத் துறவியாக்குகிறாள்.

கற்பு என்பது உடல் சார்ந்தது மட்டும் அல்ல, மனம் சார்ந்தது, இலட்சியம் சார்ந்தது. குறிக்கோள் சார்ந்தது. உறவுகளை உண்மையாகப் பேணிக் காப்பது. கற்பு என்பது நெருப்பில் குளித்து நிரூபிப்பது அல்ல, தடம்மாறிச் செல்லும் சமூகத்தின் அழுக்கை நெருப்பால் சுட்டுப் பொசுக்கிப் புடம்போட்ட பொன்னாக ஒளிரச் செய்வது. கற்புநெறி என்பது உடலால் மாசுபடாமல் காக்கப்படுவது மட்டும் அல்ல. உயிர் மாசுபடாமல் ஒழுக்க இலட்சியத்தில் வாழ்ந்து காட்டுவது. பெண்ணிற் பெருந்தக்க யாவுள என்றே பெண்மையைப் போற்றுவோம், புனிதமான தாய்மையைப் போற்றுவோம்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 2. பொருட்பால்

வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. அறநெறி அடிப்படையில் வாழ்வியலை அமைத்துக்கொள்ளும் முயற்சியைச் சார்ந்ததும், இம்முயற்சிக்குத் துணையாக அமைவதும் பொருளேயாம்.

பொருட்பாலில் - பொருள், பொருளீட்டல், பொருளியல் ஆட்சித் தொடர்பான உறுப்புகள், பொருள் நுகர்வுத் தொடர்பாக அமையக்கூடிய சூழல், விதிமுறைகள் ஆகியன அனைத்தும் விளக்கப்படுகின்றன.

அறத்துப்பால் அகநிலைச் சார்புடையது. ஆங்கு முதலில் கடவுள் வாழ்த்தப்பெறுகிறார். பொருளியல் ஆட்சிக்குரியது அரசேயாம். ஆதலால் பொருட்பால் இறைமாட்சி அதிகாரத்துடன் தொடங்கப்பெறுகிறது.

"பொருட்பால்" என்று இருப்பினும் பொருளாட்சிக்குரிய அரசின் நடைமுறைகள், அரசின் உறுப்புகள், அரசை வழிநடத்தும் பொறுப்புள்ள பெரியோர், அமைச்சு முதலியனபற்றியும் அது விரிவாகப்பேசுகிறது. பெரும்பாலும் பொருட்பாலில் ஆட்சியியலைப் பற்றி மட்டுமல்லாமல் அரசியலும் எடுத்துக்கூறப் பெற்றுள்ளது.

திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல், சமுதாயவியல் நம்பிக்கையின்பாற்பட்டது; வாழ்வியலுக்கு இசைந்தது; இந்திய மொழிகளில் உள்ள அரசியல் நீதி நூல்கள் அனைத்திலும் சிறந்தது. திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல், முற்போக்கு அணியைச் சேர்ந்தவை. திருவள்ளுவர், பொதுவுடைமைத் தத்துவத்திற்குத் தந்தை என்று போற்றப்பெறும் மாமுனிவர் காரல்மார்க்சுக்கும் மூத்த சிந்தனையாளர். பொதுவுடைமைக் கருத்தின் மூலங்கள் பல திருக்குறளில் காணப்படுகின்றன.

இன்றைய இந்திய நாட்டுக்குத் திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல் முற்றிலும் ஏற்றவை. திருக்குறள் நெறியில் இந்திய அரசியல் இயங்குமானால் வளரும்; வாழும்.

91

## 39. இறைமாட்சி

அரசின் மாட்சி, அதாவது உலகியலையும் பொருளியலையும் முறைப்படுத்தி இயக்கும் அரசின் சிறப்புக் கூறுவது. அரசின் சிறப்பை இறைமாட்சி என்று சொன்னது எங்கணும் தங்கியிருக்கின்ற இறைபோல எங்கணும் தன்னுடைய ஆட்சியின் முறையைத் தங்கவைத்தும், தன் ஆட்சியின் எல்லைக்குட்பட்ட அனைத்து எல்லையிலும் நிகழ்வன அறிந்தும், செய்வன செய்தும் முறைப்படுத்தும் ஆற்றலுடையதாக அமைதலின்.

காலத்தின் இயல்பால் இறைவன் - அரசன் என்று கூறினாலும் முடியாட்சியை மட்டுமே சார்ந்தது திருக்குறள் என்று கருதுவதற்கில்லை. குடியாட்சி அமைவுக்குரிய கொள்கைகள் திருக்குறளில் காணப்படுகின்றன என்பதைப் பொருட்பால் முழுதும் கற்றால் அறியலாம்.

*படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்*
*உடையான் அரசருள் ஏறு.* (381)

படையும் குடியும் பொருளும் அமைச்சும் நட்பும் அரணும் என்று சொல்லப்பட்ட ஆறு உறுப்புகளையும் ஒரு சேரப்பெற்று விளங்குபவன் அரசருள் ஆண் அரிமாப் போல்வான்.

குடியை முதன்மைப் படுத்தாது, படையை முதன்மைப் படுத்துவது ஏன்? குடி இயல்பாய் அமைவது. படை, தயாரிக்கப் படக்கூடிய ஒன்று. தன் நாட்டில் குடியை முறையாகப் பாதுகாக்கப் படை தேவை. அதனால், படை முதனிலைப் படுத்தப்பெற்றது.

அமைச்சு என்பது படை, குடி, கூழ் ஆகியன பற்றிச் சிறந்த முறையில் அரசுக்கு எடுத்துக்கூறி வழிநடத்துவது. அமைச்சு அரசியல் - ஆட்சியியல் தொடர்புடையது.

நட்பு அரசனின் தனிப்பட்ட வாழ்க்கையில் பங்கேற்று, அவனுடைய திறன்கள் பெருகி வளர்வதற்கு உட்சுற்றில் அமைந்த உறுப்பு. நட்பு அரசனின் அரசியல், வாழ்வியல் இரண்டுக்கும் உறுப்பாக அமைந்து இயக்கி வழிநடத்துவது.

*அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்*
*எஞ்சாமை வேந்தர்க் கியல்பு.* (382)

அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய இந்நான்கும் குறையாதிருத்தல் அரசுக்கு இயல்பு.

அரசனுக்கு முதற் குறளில் சொன்ன படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகியவற்றைப் படைத்தல் - பயன்படுத்துதல் - ஆட்சி செய்தல் ஆகியவற்றிற்குரிய இயல்புகள் இக்குறளில் எடுத்தோதப் பெறுகின்றன.

*தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்*
*நீங்கா நிலனாள் பவர்க்கு.* (383)

நாட்டையாளும் அரசனுக்கு அரசின் பணிகளை விரைந்து செய்யும் தன்மையும், அரசின் கடமைகள் இன்னதென அறிதற்கேற்ற கல்வி அறிவும், அரசின் கடமைகளைச் செய்து முடிக்கும் மனத்திட்பமும் நீங்காதிருத்தல் வேண்டும்.

"தூங்காமை" என்பதற்கு உறங்காமை என்று நேரிடையாகப் பொருள் கொள்ளக்கூடாது. ஒரு செயலைச் செய்ய வேண்டிய காலத்தில் செய்யாது காலந்தாழ்த்திச் செய்வது விழித்திருந்தாலும் உறங்கினதோடு ஒக்கும்.

இங்குக் கல்வி என்று பொதுவாகக் குறிப்பிட்டிருந்தாலும் அரசியல் ஞானம் பெறுவதற்குரிய சிறப்புடைக் கல்வி என்று அறிக.

உலகில் கல்வி - அறிவு இன்மை, விரைந்து செய்யாமை ஆகிய காரணங்களால் தோற்றவர்களைவிட, துணிந்து செய்யாமையால் தோற்றவர்களே மிகுதி. வெற்றி பொருந்திய ஆட்சிக்குத் துணிவு இன்றியமையாதது.

இன்று மக்களிடத்தில் நிலவும் ஆக்கத்திற்கு எதிரான ஆசாபாசங்களை எதிர்க்கும் துணிவு அருகி இருப்பதே நாட்டின் சிக்கல்களுக்குக் காரணம்.

*அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா*
*மானம் உடைய தரசு.* (384)

அறநெறி பிறழாது அறமல்லாதனவற்றை நீக்கி வீரத்திலும் குறைவில்லாது மானமுடையதாக விளங்குவது அரசு.

இங்கு "அறம்" என்று குறிப்பிடப்பெறுவது சமுதாய நியதியின் பொது அறங்களாகும்.

அல்லவை நீக்கி என்றதால் அறம் அல்லாதன அரசின் ஆட்சியிலும், குடிமக்கள் வாழ்வியலிலும் நிகழாவண்ணம் நீக்கி என்பது பொருள்.

அரசுக்கு மானமாவது; அறநெறி பிறழாமை, முறை கோடாமை, தன் நாட்டு மக்களுக்கு வாழ்வளித்தல் ஆகியவற்றால் ஏற்படக்கூடிய பெருமை என்பர்.

*இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த*
*வகுத்தலும் வல்ல தரசு.* (385)

ஆட்சியியலுக்குரிய பொருள் வாயில்களை உருவாக்கலும், பொருளை ஈட்டுதலும், ஈட்டிய பொருளை மூலதனமாகும்வரை தொகுத்துக் காத்தலும், அங்ஙனம் காத்த மூலதனத்தை மக்களுக்குப் பயன்படும் வழியில் வகுத்துச் செலவிடுதலும் தெரிந்து செய்யக்கூடிய வன்மையுடையதே அரசு.

இயற்றலும் என்றதாவது : அரசுக்குப் பொருள் தேவை. அரசின் தேவை வளர்தல் தவிர்க்க இயலாதது. ஆதலால் மக்களிடமிருந்து வரும் வரி முதலியவற்றை மட்டுமே பொருள் வருவதற்குரிய வாயில் என்று அரசு நம்பியிராமல் புதிய வாயில்களையும் கண்டுபிடிக்கவேண்டும் என்பது கருத்து. இதனால் உய்த்துணர்ந்து உள்நாட்டில் தொழில்வளர்ச்சி, வாணிக வளர்ச்சி ஆகியன அரசின் பொருளீட்டுதற்குரிய வாயில்கள்.

மதுவகை விற்கும் கடைகளைத் திறத்தல், பரிசுச் சீட்டுகளை விற்றல் ஆகியன திருக்குறள் கூறும் இயற்றலாகா. இவை புதிய பொருள்களைக் கொண்டுவரும் வாயில்களல்ல. மக்களிடத்தில், அதுவும் சாதாரண ஏழைகளிடத்தில் அவர்களை மயக்கத்திற்கும் ஆசைகளுக்கும் ஆட்படுத்தி எடுத்துக் கொள்வதாகும். இதனை இயற்றல் என்று சொல்லமுடியாது. இஃது ஒரு கொள்ளையே.

பொருளை மூலதனமாக வளர்த்து முதலீடு ஆக்கி மக்களுக்கு வேலை வாய்ப்பும் ஊதியமும், அரசுக்கு ஈட்டமும் கிடைக்கத்தக்க வகையில் செய்யவேண்டும் என்பதால் காத்தல் என்றார். காலையில் வரி வாங்கி மாலையில் செலவழித்துவிட்டு அரசாங்கக் கருவூலத்தைக் காலியாக வைத்தல் சிறந்த ஆட்சி மரபன்று.

வகுத்தல் என்பது நாட்டு மக்கள் அனைவருக்கும் சமநிலையில் சென்று சேரும் வகையில் முறைப்படுத்துவது.

விளம்பரம், பொழுதுபோக்கு, முறையில்லாத முறையில் சிலரைத் திருப்திப் படுத்துதல் என்ற வகையில் எல்லாம் அரசு தன் செல்வத்தைச் செலவழிக்காது, மக்கள் விரும்பினாலும் விரும்பாது போனாலும் அவர்களுக்கு எது நல்லதோ அதையே செய்யக்கூடிய வன்மை அரசுக்கு வேண்டும். அதனால், "வல்லது அரசு" என்றார். இன்று சோசலிச சமுதாய அமைப்பையுடைய அரசுகள்தாம் இத்துறையில் சிறந்து விளங்குகின்றன. மற்ற அரசுகள் நெறியல்லாத நெறியில்கூட மக்களைத் திருப்திப்படுத்தவே முயலுகின்றன.

*காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்*
*மீக்கூறும் மன்னன் நிலம்.* (386)

காட்சிக்கு எளியவனாகவும், எப்பொழுதும் இன்சொல் சொல்பவனாகவும் உள்ள அரசனின் நாட்டைச் சிறந்த நாடென்று உலகம் உயர்த்திக்கூறும்.

காட்சிக்கு எளியன் என்றால் எளிதில் சென்று காணக்கூடியனாக இருக்கவேண்டும்.

குறிப்பு : இன்று காட்சிக்கு எளியராக இருப்பது பெருமையன்று என்று கருதுபவரும் உளர்.

அரசன் தன்னிடம் முறையிடவும் குறையிரந்து கூறவும் மக்கள் வரும்பொழுது பரிவாரங்களுடன் படாடோபமாக இருந்தால் சூழ்நிலை அச்சத்தால் உள்ளதைச் சொல்லாமல் போய்விடுவர். ஆதலால் மக்களைக் காணும்பொழுது எளிய தோற்றமும் எளிமையான சூழ்நிலையும் தேவை.

நாட்டையாள்பவர் எந்தச் சூழ்நிலையிலும் யார்மாட்டும் கடுஞ்சொல் கூறலாகாது என்பது கருத்து.

*இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்*
*தான்கண் டனைத்திவ் வுலகு.* (387)

இனிய சொல்லுடன் மக்களுக்கு வேண்டியனவற்றைக் கொடுத்து அன்பாகக் காக்கவல்ல அரசனுக்கு, இவ்வுலகம் புகழையும் சேர்க்கும்; அந்த அரசன் கருதியவாறும் உலகம் அமையும். இன்சொல் என்று கூறியது சொல்லின் அளவில் மட்டுமன்று. எத்தனையோ பேர் இனிய சொற்களைக் கொட்டி அளந்துவிடுவர். ஆனால் பயனைத்தான் காணமுடியாது. திருக்குறள் கூறும் இன்சொல் என்பது சொல், சொல்லினைக்கூறும் குரல் அழுத்தம், சொல்லினால் உணர்த்தப்படும் பொருள், சொல்லினால் விளையும் விளைவு ஆகிய அனைத்தையும் தழுவியதேயாம்.

அரசற்கு ஈதல் என்பது ஒரோவழி உடனடித் தேவைக்குப் பொருள் ஈதல் என்று அமையும். ஆனால், அரசு ஈதல் என்றால் உரிய வேலைவாய்ப்பு, நலத்திட்டங்கள் என்றே பொருள் கொள்ளவேண்டும். அரசுத்துறையில் ஈதல் நிலையாக அமைதல் வேண்டும்.

*முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு*
*இறையென்று வைக்கப் படும்.* (388)

நடுநிலை உணர்வில் முடிவுகள் எடுத்து மக்களைக் காப்பாற்றும் மன்னவன் மக்களுக்குக் கடவுள் என்றே கருதப்படுவான்.

முறை செய்தலாவது :
1. உரிமையியல், குற்றவியல் வழக்குகளில் நடுநிலையில் தீர்ப்பு வழங்குதல்.
2. கல்வி, பொருள் செய்தல், மருத்துவம் ஆகிய அனைத்துத் துறையிலும் சம வாய்ப்பளித்தல்.
3. நாட்டின் பொருளை அனைவர்க்கும் அவரவர் தம் உழைப்புக்கேற்பப் பகிர்ந்து அளித்தல்.

"இறையென்று வைக்கப்படும்" : "இறையென்று" என்பதால் அவன் இறையன்று என்ற கருத்துப்பெறப்படுகிறது. அரசன் கடவுளின் பிரதிநிதி - அரசனின் ஆணை கடவுளின் ஆணை என்றெல்லாம் சொன்ன மேலைநாட்டு வழக்கையும் வடபுலத்து வழக்கையும் மறுத்தவாறு.

*செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்*
*கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.* (389)

தனது செவிகைப்பச் சொல்லப்பெறும் சொற்களையும் பொறுத்துக்கொள்ளும் பண்புடைய வேந்தனின் ஆட்சியின் கீழ் உலகம் தங்கும்.

செவிகைக்கும் சொற்களாவன :
1. அமைச்சர், அரசின் நெறிமுறைகளை உணர்த்தும் பொருட்டு இடித்துக் கூறவேண்டிய அவசியம் ஏற்படும்பொழுது இடித்துக்கூறும் சொற்கள்.
2. குடிமக்கள் ஆற்றாமையால் கூறும் சொற்கள்.
3. பகைவர்கள் சினமூட்டி அழிப்பதற்காகப் பயன்படுத்தக்கூடிய சொற்கள்.

*கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்*
*உடையானாம் வேந்தர்க் கொளி.* (390)

வேண்டுவன கொடுத்தல், யாவரிடத்தும் அன்பாகவிருத்தல், நேர்மையான ஆட்சி, குடிகளைப் பேணுதல் ஆகிய இந்நான்கு செயல்களையும் உடையவன் அரசருக்கெல்லாம் விளக்கு.
1. கொடை என்றது அரசின் ஆக்கத்திற்கு அறிவுரை வழங்கும் அறிஞர், சான்றோர்க்கு வழங்குதல்.
2. யாவரிடத்தும் அன்பாயிருத்தல், அதாவது வேறுபாடு பாராட்டாது யார்மாட்டும் ஒத்த அன்பாயிருத்தல்.
3. செங்கோல் : இடம் நோக்கியோ தகுதி நோக்கியோ வளைந்து கொடுக்காதது.
4. குடிகளைப் பேணுதல் என்பது அறியாமை, வறுமை, பிணி, பகை ஆகியனவற்றால் கேடு வராமல் பாதுகாத்தல்.

(தொடரும்)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடி அடிகளாரின் சிறுகதைகள் - ஒரு மதிப்பீடு

(கிருங்கை. சேதுபதி)

*அருள்நெறிக்கதைகள்*

பகவான் ராமகிருஷ்ணரின் உருவகக் கதைகளோடு ஒப்பிடத்தக்க கதைகளும் இப்பகுதியில் இடம்பெறுகின்றன.

அன்னகாமுப்பிள்ளை வளர்க்கும் நாயைப் பற்றிய கதையின் முடிவில், "ஊர் நாயென வாழ்தலினும், வளர்ப்பு நாயென வாழ்தல் நன்று" என்னும் அறத்தை வலியுறுத்துகிறார் அடிகளார். அதற்கான விளக்கத்தை அக்கதையில், பின்வருமாறு எழுதுகிறார். "ஆன்மாவாகிய நாய், இறைவனாகிய வளர்ப்புத் தந்தையால் பொன், பொருள், போகம் முதலியன புணர்த்தி வளர்க்கப்பெறுகிறது. ஆயினும் ஆன்மா, உலகியல் என்ற ஊர் நாய்ச் சேர்க்கையில் சேருகிறது" . இறைவன் திருத்தி ஆட்கொள்கிறான் என்று முடிகிற இக்கதை,

நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனைப் பாமரரும் பற்றத் துணைசெய்யவல்லது - இவ்விறைவன் எச்சமயத்துக்கும் பொதுவானவன். கடவுள் இல்லை என்பார்க்கும் கருத்தாகி நிற்பவன். அவனுக்கென ஆலய வாசலைத் திறக்கவேண்டாம். ஆன்மாவின் வாசலாகிய இதயத்தைத் திறவுங்கள். இறையருளைத் தேக்குங்கள்! என்று சொல்கிறது மற்றொரு கதை. அதன் முடிவில், "இதயத்தினை மூடிவைத்து விட்டு, ஆயிரம் ஆயிரம் சடங்குகள் செய்தும் இதயம் திறக்காது போனால், இறையருளை வாங்க இயலாது. பயனற்ற வாழ்க்கையாகிப் போகும்" என்று எச்சரிக்கவும் செய்கிறார் அடிகளார்.

கடவுளைத் தேடி அலையும் முத்துச்சாமிப் பக்தனுக்குக் கனவில் காட்சி கொடுக்கிற கடவுள், "நீ என்னை நோக்கி வரவேண்டாம்! நான் உன்னை நோக்கி வருகின்றேன்" என்கிறார்!

மகிழ்ச்சியோடு முத்துச்சாமி கேட்கிறான், "அப்படியா! இறைவா! அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?"

"வேறு ஒன்றும் செய்ய வேண்டாம்! உன் பக்கத்து வீட்டினை நேசி! அன்பு காட்டு! அதுவே போதும்! அந்த அன்பில் நான் இருக்கிறேன்" என்றார் கடவுள். [8]

"அயலானை நேசி" எனும் திருவிவிலிய வாசகம், இச்சிறப்புமிகு கதையாய் விரிவது. அடிகளார் தம் கைவண்ணத்தில்; என்று ஒப்புநோக்கிக் கொள்ளலாம்.

இக்கதையில் வருங்கடவுள், பெருங்கடவுள்! அடுத்த கதையில் வருவது சிறுதெய்வம்! ("ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று 5ஆம் நூற்றாண்டிலிருந்தே நாம் சொல்லி வருகிறோம். ஆனாலும் மனிதர்களைப் போலவே, கடவுள்களுக்குள்ளும் சிறியவர்கள்; பெரியவர்கள்! இருக்கட்டும்!) அதாவது, கடவுள் நகரவாசிகளின் இறைவன். கிராமத்தார்களுக்கோ, அது கிராம தேவதை.

இந்த இடைவெளியில் இன்னொன்றையும் சொல்லிவிட வேண்டும். நகரத் தெய்வங்களிடம் நாம் போய் முறையிட வேண்டும்; கேட்கிறதோ கேட்கலையோ சிலையாக நிற்கும்! கிராம தேவதையோ, சாமியாடி மூலமாக இறங்கிவந்து அருளும்! அப்படியொரு சாமியாட்டம் கோவிந்தன் என்பான் வசிக்கிற கிராமத்தில் நடக்கிறது மழை வேண்டி முறையிடுகின்றனர் மக்கள்.

"ஏன்பா! நான் நிரந்தரமாகக் குடியிருக்கும் மரங்களையெல்லாம் வெட்டி அழிச்சுட்டீங்களே! அதனாலேநான் பச்சை கண்ட இடம் நோக்கி ஓடிட்டேன் அதனாலே மழையில்லை" என்கிறது சாமி.

"தெரியாம செஞ்சுட்டோம்! இனி நெறைய மரம் வைச்சு வளர்க்கிறோம் அம்மா! மரத்தை இனி வெட்டமாட்டோம்" என்கின்றனர் மக்கள். [9]

இக்கதையில், "நீரின்றி அமையாது உலகம் எனும் குறள்நெறிக்கு - வாழ்வியல் விளக்கமாக - மரம்நடுதலின் பலனை - மக்களுக்கு யார் வாயினால் சொன்னால் எடுபடுமோ, அவர் வாயினாலேயே உத்தரவிடச் செய்திருக்கிறார் அடிகளார்.

சொல்பவர் சொன்னால், கேட்பவர்கள் கதையென்பதை விடவும், மெய்யென்றே ஒப்புக்கொள்ளத்தான் செய்வார்கள் அல்லவா? அதனால்தான் அவர் எழுதிய கதைகளில் காண விரும்பிய சமுதாயத்தைத் தம் கண்முன்னே மெய்ப்பித்துக் காட்டினார். எந்த நோக்கத்துக்காக, எந்த மக்களுக்கு இந்தக் கதைகளை எழுதினாரோ / சொன்னாரோ, அந்த நோக்கத்தை அந்த மக்களைக் கொண்டே ஆக்கிக் காட்டியவர் அடிகளார். அறிவியல் நெறியில் ஆன்மிகப் பணி செய்தவர்.

மதுக்கடை மற்றும் திரையரங்கம் இல்லாத, அரசு ஒழிக்கும் முன்பே லாட்டரிச் சீட்டுகளை நுழையவிடாத முற்போக்குக் கிராமமாகக் குன்றக்குடியை மாற்றினார். அரசை எதிர்பாராது, கூட்டுறவு வங்கிகளின் உதவியோடு - மக்களே நிர்வகித்துப் பணி செய்யும் தொழிற்கூடங்களை உருவாக்கினார். சுந்தரி போன்ற பெண்கள் திருக்குறள் மரபில் வாழ மகளிர் தொழிற்கூடம் உருவாக்கினார். அனைத்துக் குழந்தைகளுக்கும் அடிப்படைக் கல்விதரக் கல்வி நிறுவனங்கள் அமைத்தார். திருக்குறள் பேரவையைத் தோற்றுவித்தார். மதநல்லிணக்கம் பேணத் திருவருட்பேரவையை - அனைத்து மதச் சான்றோர்களையும் கொண்டு அமைத்தார். தீண்டாமை பூண்டோடு அற்றுப்போகத் தமது திருமடத்தில் ஆதிதிராவிட (தலித்) தோழர்களைப் பணிகளில் அமர்த்தினார். அவர்கள் திருக்கரங்களால் சமைத்த உணவை, மேட்டுக்குடிப் பிறந்தோர்க்குப் பரிமாறித் தாமும் அருந்தி மௌனப்புரட்சி நடத்தினார். அவர் காலத்துப் பிரதமர் ஆகிய திருமதி இந்திராகாந்தி, 1984 செப்டம்பர் மாத THE HINDU ஆங்கில நாளிதழின் வழி அறிந்து, This is what I should like for all others villages என்று பாராட்டினார். இந்திய அரசுத் திட்டக்குழுவின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட இம்முயற்சி, "குன்றக்குடி மாதிரித் திட்டமாக" இந்திய அளவில் அறிமுகமானது...[10]

எல்லாமும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்ப் போய்விடாமல் எப்போதும் சமுதாயத்தைப் புனரமைத்துக் கொண்டிருக்கும் நிலைபேறுடைய மறுமலர்ச்சிக் கதைகளாக

அவரை எழுதத் தூண்டியவை, காந்தியமும், கம்யூனிசமும், பெரியார்தம் சீர்திருத்தங்களும், திருக்குறளும் என்றால் பொய்யில்லை; புனைவுமில்லை.

இதற்கான வலிமையையும் ஆற்றலையும் தமிழ் இலக்கியத்தின் உள்ளிருந்தும், இந்திய - உலக அளவிலான இலக்கியங்களில் இருந்தும் பெற்ற அவர் அவற்றைச் செயல்படுத்திய விதமே சிறப்பான பாராட்டுக்கும், தொடர் முயற்சிகளுக்கும் உந்து சக்தியாக அமைந்தது எனலாம்.

வடிவநேர்த்தி, உள்ளடக்கம் செறிவு, கலைநயம், முதலிய சிறுகதையம்சங்கள் குறைந்தவை என்று "இலக்கியச் செங்கோல்" ஆகிய விமர்சன அளவுகோலை எவரும் எடுக்கலாம். அளக்கலாம். குறைத்தும், கழித்தும் கூறலாம், எழுதலாம். அது அவர்களின் ஜனநாயக உரிமை என்று அடிகளார் பாணியிலே இப்போது, இங்கே நாம் விட்டுவிடலாம். தனியொரு தலைப்பில் எடுத்து ஆராய இவர்தம் பாத்திரப்படைப்புகளும் அவற்றுக்கான பெயர்களும் காத்து நிற்கின்றன. இருக்கட்டும்!

தமது கதைகளை வீண் பொழுதுபோக்கும் வெறும் கதைகளாக்கிவிடாமல், விரைந்து செயலாற்றும் உந்து சக்தியுடையனவாகத் தம் பணியின் மூலம் நிறுவிக் காட்டியவர் அடிகளார்.

இப்போதைக்கு அவரது அனைத்துச் சிறுகதைகளையும் மதிப்பிட்டு நிறைவுபடுத்த, அடிகளார் மரபிலேயே, ஒரு திருக்குறளை முன்னிறுத்தலாம்!

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்" (திருக்குறள் - 664)

அவ்வண்ணமே ஆகத் தருணம் பார்த்துக் காத்துக் கிடக்கும் இந்தக்கதைகள் எவையும், அடிகளாருக்காகக் காத்திருக்கவில்லை; ஆர்வத்தோடு கற்றுக் கடைபிடிக்கப்போகும் வாசகர்களுக்காக, அவர்களது வசந்தகால ஒப்புரவு வாழ்க்கைக்காகக் காத்திருக்கின்றன எனலாம்!



(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# பெண் தெய்வ வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்
திருச்சிராப்பள்ளி)

"அறுவர்க்கு இளைய நங்கை" இறைவனை ஆடல் கண்ட எளிய அணங்கு, சூருடைக் கானகம் உகந்த காளி, தாருகன் பேருரம் கிழித்த பெண்" என்று புதியதொரு பெண் தெய்வத்தையும் அதன்வழி அன்னையர் எழுவர் வழிபாட்டின் தொடக்கத்தையும் சிலம்பின் வழக்குரைகாதை வெளிச்சப்படுத்துகிறது. அறுவர்க்கு இளைய நங்கை என்பதால், அன்னையர் எழுவரில் இளையவரான பெண்தெய்வம் என்பது பெறப்படும். இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு யாரென்பதைச் சிலப்பதிகாரத்திற்குச் சற்றுப்பின் வந்த அப்பரும், சம்பந்தரும் தங்கள் பதிகங்களில் பல இடங்களில் பதிவு செய்துள்ளனர்.

"ஆடினார் பெருங்கூத்து காளி காண" 25
"காளி முன் காணக் கானிடை நடஞ்செய்த" 26

சிலப்பதிகாரமே மூன்றாவது சொற்றொடரில் இளைய நங்கையான இவ்வணங்கைப் பெயரிட்டு அடையாளப் படுத்துகிறது, "காளி" என்று. நான்காவது சொற்றொடர் இக்காளி தாருகனின் பேருரம் கிழித்தவள் என்கிறது. இந்தச் செய்தியையும் பின்னால் வந்த அப்பரும் சம்பந்தரும் உறுதிப்படுத்துகின்றனர்.

"தாருகன் தன்னுயிர் உண்டபெண்" 27
"வென்றிமிகு தாரகன் ஆருயிர் அடங்கக்
கன்றிவரு கோபம் மிகு காளி" 28

சிலப்பதிகாரமும் தொடர்ந்து தேவாரப் பதிகங்களும் சுட்டும் 'காளி'யைக் காரைக்காலம்மையும் குறிப்பிடுகிறார். பேயொன்று தன் பிள்ளைக்குக் காளியென்று பெயரிட்டதாம். இறைவனாடும் காடு, அணங்காடும் காடாம்.[29] காரைக்காலம்மையின் இக்கூற்றுகள்,

சிலப்பதிகாரச் செய்திகளை, உறுதிப்படுத்தும் பக்கத் துணையாவதுடன், அவர் காலத்தையும் உறுதிசெய்கின்றன. ஏறத்தாழச் சிலப்பதிகாரத்தின் காலமும் காரைக்காலம்மையின் காலமும் ஒன்றெனலாம்.

அன்னையர் எழுவரின் பெயர்கள் அனைத்தும் இவ்விலக்கியங்கள் எவற்றிலும் இடம்பெறவில்லையாயினும், 'காளி' தனியிடமும் தனிச்சிறப்பும் பெறுவது, தமிழ்நாட்டின் காளி வழிபாட்டிற்கான தோற்றுவாயாக அமைவதுடன், தமிழ்நாட்டின் ஆடற்கலை வரலாறு பற்றிய புதிய சிந்தனைகளுக்கும் வித்திடுவது தெளிவு. "அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப் பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை"யைக் கூறிய பிறகே, காளியைப் பற்றிய செய்திகள் பேசப்படுவதன் மூலம் கொற்றவையான துர்க்கைக்கு அடுத்த நிலையிலேயே இவ்வன்னையர் எழுவர் வழிபாடு இருந்ததென்பதைச் சிலப்பதிகாரம் நன்கு விளக்குகிறது.

அன்னையர் எழுவருள் காளியை உள்ளடக்கி, அறுவர்க்கும் அவரை இளைய நங்கையாக்கிச் சிறப்புச் செய்யும் சிலப்பதிகாரச் சிந்தனை தேவார காலத்தில் மாற்றம் பெறுவதைப் பார்க்க முடிகிறது. அன்னையர் எழுவருள் மகேசுவரி (சிவபெருமானின் மனைவி), வைஷ்ணவி (திருமாலின் மனைவி), கௌமாரி (முருகனின் மனைவி), பிராமி (நான்முகனின் மனைவி), வராகி (வராகப் பெருமானின் மனைவி), இந்திராணி (இந்திரனின் மனைவி), என்று இவ்வறுவரும் தமிழ்நாட்டு மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்த ஆண் தெய்வங்களின் மனைவியர்கள். காளி மட்டுமே இறைவியின் அம்சமாகத் தோன்றியவள். அரக்கர்களை அழிப்பதற்காகவே தோற்றுவிக்கப்பட்டவள்.[31] அதனாலேயே சிலம்பு அவளை அறுவர்க்கும் இளைய நங்கை என்கிறது. எவருடைய மனைவியாகவுமின்றி இறைவியின் அம்சமாகத் தோன்றிய காளியை அன்னையர் எழுவருடன் சில காலமே வைத்திருந்த சமய மரபுகள், அவளை அக்கூட்டத்திலிருந்து பிரித்துத் தனிமைப்படுத்தி, தனியொரு தெய்வமாக்கி உயர்நிலைக்கு நகர்த்தின. அன்னையர் எழுவருள் காளியைத் தவிர வேறு யாருக்கும் சிறப்புச் செயற்பாடுகள் அமையவில்லை. ஆகமங்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் இவர்கள் உடன்கூட்டத் தெய்வங்களாக மட்டுமே அறியப்படுவது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.

தாரகன், சும்ப, நிசும்பர் எனும் அரக்கர்களை அழிப்பதற்காகவே காளி உருவாக்கப்பட்டதாகப் பிற்கால ஆகமங்கள் பேசுகின்றன. சிவபெருமானை ஆடற்கலையின் தனிப்பெருந் தெய்வமாக உயர்த்தக் காளி பண்பட்டிருப்பதை இங்கு எண்ணிப்பார்க்கலாம். தொன்மங்கள் வளர்ந்து கிளைத்த நிலையில், காளி எழுவர் அன்னையர் குழுவிலிருந்து விலகித் தனிப்பெருந்தெய்வமாகிறார். அன்னையர் எழுவர் தொகுதியில் காளியின் நகர்வால் ஏற்பட்ட வெற்றிடத்தைச் சாமுண்டி எனும் புதிய பெண்தெய்வம் கொண்டு நிரப்பிய சமயச் சூழலை அப்பர் மறைமுகமாகத் தம் பதிகமொன்றில் பதிவு செய்துள்ளார். "சாமுண்டி சாமவேதம் கூத்தொடும் பாடவைத்தார்" [32] எனும் நாவுக்கரசரின் சுட்டல், சாமுண்டி எனும் புதுப் பெயரைப் பெண்தெய்வ வழிபாட்டிற்கு வழங்குகிறது.

அப்பர் இச்சாமுண்டி எனும் பெயரால் குறித்தது காளியையா அல்லது வேறொரு பெண் தெய்வத்தையா என்பதைத் தெளிவுற அறியக்கூடவில்லை என்றாலும், பிற்கால ஆகமங்கள் இச்சாமுண்டியை இயமனின் மனைவியாக்கி, இயமி என்றும் பெயர் சூட்டி அன்னையர் எழுவர் தொகுதியில் அமர்த்திவிடுவதைப் பார்க்கமுடிகிறது.[34] தமிழ்நாட்டின் மிகத் தொன்மையான அன்னையர் எழுவர் சிற்பத் தொகுதிகள் அனைத்துமே இச்சாமுண்டியைக் கொண்டுள்ளன. திருக்கோளக்குடித் தொகுதியிலுள்ள சாமுண்டியின் திருவடிக்கீழ் எருமையின் தலையிருப்பது குறிப்பிடத்தக்கது.[35] தேவார காலத்துக் காளி வண்ணனைகளை இச்சாமுண்டியின் வடிவம் அப்படியே பெற்றிருப்பதும் கூர்ந்து நோக்கத்தக்கது.

"பைதற் பிணக்குழைக் காளி" [36]
"கோபம் மிகு காளி" [37]
"கத்துங் காளி" [38]

சிலப்பதிகாரக் காலத்தில் அன்னையர் எழுவருள் ஒருவராக அறிமுகமாகும் காளி, தேவார காலத்தில் தனித் தெய்வமாகிறார். அவர் இடத்திற்கு வரும் புதிய நுழைவான சாமுண்டி, காளியின் தன்மைகளைப் பெற்றவராகவே அமைந்து, அன்னையர் எழுவர் தொகுதியில் சிறப்பிடம் பெற்றுக் கூட்டத்தின் நடுவிலும் தனித்தமையும் வாய்ப்பைப் பெறுகிறார். இந்த இடமாற்றங்களுக் கிடையில், தேவார வீச்சால் உமை மிக உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லப்படுவதைக் காணமுடிகிறது.

காரைக்காலம்மையால் கூட விதந்தோதப்படாத உமை, காலப்போக்கிற்கேற்ப அப்பராலும், சம்பந்தராலும் சைவ உலகின் முதன்மைப் பெண் தெய்வமாக சிவபெருமானின் உரிமையுடைய மனைவியாக அடையாளப்படுத்தப்படுகிறார். ஆறு திருமுறைகளும் உமையை அடி முதல் முடிவரை வண்ணித்துக் களிக்கின்றன.[39] இறைவனின் திருவிளையாடல்களுடன் உமையும் இணைக்கப்படுவதைப் பார்க்கிறோம். இறைவன் ஆடலுக்கு அம்மை பாடுகிறார், உடன் ஆடுகிறார். இருவருமாய் இணைந்து பிள்ளையாரைப் பெற்றெடுக்கிறார்கள்.[40] முருகனின் தாயாகவும் அம்மை முழுமனதுடன் ஏற்கப்பட்டுவிடுகிறார்.

உமையைக் கொண்டாடிப் பரவும் தேவார இலக்கியங்கள், கொற்றவையான துர்க்கையை முழுமையாகக் கைவிடுகின்றன.[41] காளியின் புதுவரவை ஏற்கின்றன. சாமுண்டியை அறிமுகப்படுத்துகின்றன. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியும் காட்டும் இலக்கியஞ் சார்ந்த தமிழ்நாட்டு சமய நிலையில், இடம்பெறும் பெண்தெய்வங்களாக உமை தலைமையேற்க, காளி கொற்றவையை நிகர் செய்கிறார். அன்னையர் எழுவர் சாமுண்டியுடன் சப்தமாதர்களாகின்றனர்.

கி.பி. 250ல் ஆந்திரத்தின் தென்பகுதியிலும் தமிழ்நாட்டின் வடபகுதியிலும் கால்கொண்ட பல்லவராட்சி கி.பி. 590 வரை செப்பேடுகளை பிராகிருதத்திலும் வடமொழியிலும் வெளியிட்டுள்ளதெனினும் அவற்றுள் ஒன்றிலும் பெண்தெய்வங்கள் இடம்பெறவில்லை. இக்காலகட்டத்தில் பாண்டியநாட்டில் களப்பிரர் ஆட்சி நடந்தது. இக்காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகளும் தேவகுலங்களைக் குறிக்கின்றனவே தவிர பெண்தெய்வங்களைச் சுட்டவில்லை. தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளில் இடம்பெறும் முதல் பெண்தெய்வம் பார்வதியான உமையன்னைதான். திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையின் மேல்குடைவரையிலுள்ள, பல்லவ மன்னர் முதலாம் மகேந்திரவர்மரின் கல்வெட்டு,[42] நதிப்பிரியனான சிவபெருமானை அங்கு தனியே விட அஞ்சிப் பார்வதியும் உடன் வந்ததாகக் கூறுகிறது. மாமல்லபுரத்து அதிரணசண்டேசுவரத்திலும் காஞ்சிபுரம் மகேந்திரவர்மேசுவரம் கோயிலிலும் கிடைக்கும் பல்லவக் கல்வெட்டுகள் [43] உமையை

மலைமகளாகச் சுட்டி இறைவனுடன் உமையும் அக்கோயில்களைத் தங்கள் நிரந்தரக் குடியிருப்புகளாக்கிக் கொள்ளுமாறு வேண்டுகின்றன.

கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிக்கும் எட்டாம் நூற்றாண்டின் இறுதிக்கும் இடையிலான காலகட்டத்தில் (கி.பி. 590 - 796) தமிழ்நாட்டில் நிலவிய பெண்தெய்வ வழிபாட்டு அமைப்பை அறியச் சிற்பங்களே பெருமளவிற்கு உதவுகின்றன. இந்த நூற்றாண்டுகளில் வடதமிழ்நாடு பல்லவராட்சியிலும் தென்தமிழ்நாடு பாண்டியர் ஆட்சியிலும் இடைப்பட்ட பகுதிகள் முத்தரையர் போன்ற சிற்றரசர்கள் ஆட்சியிலும் இருந்தன.

சங்க மக்களின் முழுமுதற் பெண்தெய்வமாய் விளங்கிய கொற்றவையைத் தேவாரப் பெரியவர்கள் மறைந்தபோதும் மக்கள் விடவில்லை. குறிப்பாக வடதமிழ்நாட்டில் கொற்றவை வழிபாடு துர்க்கை வழிபாடாகிச் சீரோடும் சிறப்போடும் தொடர்ந்தது. உமையை ஏற்றுக்கொண்டபோதும், அவரையே சிவபெருமானுடன் உறையும் கருவறைத் தெய்வமாய் அமைத்தபோதும் பல்லவ மன்னர்களால் வீரத் தெய்வமான பழங்கொற்றவையை விட்டுக்கொடுக்கக் கூடவில்லை. மக்கள் தெய்வமாக இருந்த காரணத்தாலேயே கொற்றவை தொடர்ந்து கோயில்களில் துர்க்கையாக எழுந்தருள முடிந்தது.

பல்லவ மண்ணில் மட்டுமல்லாது பாண்டிய மண்ணிலும் இவ்வம்மை தமக்கெனத் தனிக்கோயில் பெற்றார்; கோட்டத் தெய்வமாகவும் இருந்தார். வடதமிழ்நாட்டினர் சீராட்டிய அளவிற்கு இல்லையாயினும், தென்தமிழ்நாட்டிலும் அவருக்கு இடமிருந்ததைப் பரங்குன்றமும், குன்றக்குடியும் உணர்த்துகின்றன. உமை, சோமாஸ்கந்தர் தொகுதியில் இடம்பெற்றதுடன், இறைவனின் பெரும்பாலான திருத்தேர்றறங்களில் அவர் தேவி என்ற நிலையில் காட்சி தந்தார். புதிய வரவான எழுவர் அன்னையர் தொகுதி தென்தமிழ்நாட்டில் பெற்ற பரவலான வரவேற்பை வடதமிழ்நாட்டில் பெறக்கூடவில்லை. பாண்டியர் பகுதியில் திருக்கோளக்குடி, குன்னத்தூர், கோகர்ணம், பரங்குன்றம், மலையடிப்பட்டி எனும் ஐந்து குடைவரைகளில் இடம்பெற்ற இத்தொகுதி வடதமிழ்நாட்டில் காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில் மட்டுமே காணப்படுகிறது.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அருளாலய மாமாங்கம்

(தமிழாகரர் **தெ. முருகசாமி**, காரைக்குடி)

*கங்கைக்கு இராமன் வந்தான்!*
*காவிரிசேர் மாமாங் கம்மாம்*
*தங்கைக்கு எந்த இராமன்*
*தாங்கியவள் பாவம் கொண்டான்!*
*அங்கையுள் நெல்லிக் கனியாய்*
*அதற்கொரு விடையும் உண்டு,*
*சங்கையுற வேண்டாம்! சற்றே*
*சரித்திரந்தான் விடைசொல் லாதோ?*

*அக்கிரமம் அதிகம் ஆனால்*
*அவதாரம் எடுப்பேன் என்று*
*விக்கிரம னாக வந்த*
*வியத்தகு கண்ணன் சொன்ன*
*தக்கநற் கீதைக் கேற்பத்*
*தற்போது அவதா ரந்தான்*
*தக்கபடி எடுத்தா னோதான்!*
*தடையின்றிப் பார்த்தால் நாட்டில்;*

*நடக்கின்ற அக்கிர மங்கள்*
*நாங்கூழ்ப்புழுப் போன்ற தாலே*
*தடாவென அவத ரிக்கத்*
*தாமதந்தான் ஆகு தோதான்!*
*படமெடுத் தாடும் அந்தப்*
*பாம்பெனக் கொடுமை சேர்ந்தால்*
*குடந்தைமகா மகங்கள் தோறும்*
*கூடிடும் பாவத் தோடே;*

குவலயப் பாவ மெல்லாம்
குபீரெனும் அவதா ரத்தால்
தவமாக ஓடிப் போகும்!
தரணியும் புனித மாகும்!
சிவமாக அதுவ ரைக்கும்
சிலபல ஆண்டாய் வாழ்ந்து
சவமாகப் போக நம்மின்
சந்ததியும் அவ்வா றாமே!

ஆதலால் அநியா யங்கள்
அதிகமாய் ஆனால் தானே
தோதான அவதா ரந்தான்
தொடர்ந்திடும் என்ற உண்மை
ஓதாது, உணர்ந்த தாலே
ஒருவாறாய் அருளா லயத்துக்
காதலால் கனவில் சொல்ல
கண்ணிமைப்பில் அடிகள் வந்தார்!

தீர்த்தத்தில் மூழ்கி னாலோ
தீர்த்தத்தைத் தெளிப்ப தாலோ
தீர்ந்திடும் பாவம் என்றால்
தீவிர வாதத் தோடே
தீராத அநியா யங்கள்
தீருமோ நீரால் இங்கே?
தீராநோ யான நெஞ்சின்
தீமைகள் தீயும் நாளே;

மகாமகக் குளியல் என்போம்!
மாகும்ப மேளா என்போம்!
மகாசிவ ராத்திரிக் கான
மாப்பயன் கிட்டும் என்போம்!
மகாசந்நி தானம் சொன்ன
மாத்தமிழ்த் தெய்வ வாக்கே
மகாஅரு ளால யத்தின்
மாமாங்கப் பேறென் பேனே!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# புதிய காற்று இதழுக்கான நேர்காணலின்போது தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களின் பேட்டி

தீண்டாமை என்பது இரத்தத்தில் கலந்துவிட்ட சமூகத்தீமை. ஒரு குறிப்பிட்ட மனிதர்களை அடிமைப்படுத்துவது அவர்களோடு உறவாடுவதில்லை. அவர்களோடு திருமண உறவு கொள்வதில்லை என்பது காலம் காலமாக ஊறிப்போயிருக்கிற ஒரு சமூகக் கொடுமை அதை அகற்றுவதற்குப் பாடுபடவேண்டும். ஆனால் அதற்கு மதமாற்றத் தடைச்சட்டம் மட்டுமே தீர்வு என்று நாம் சொல்லிவிடமுடியாது. மனமாற்றத்தின் மூலமாகத்தான் தீர்வுகாண வேண்டும்.



❖ *மனிதர்களை தீண்டாதவர்களாக ஆக்கியது சமூகப் பழக்கம் என்கிறீர்கள். ஆனால் இந்திய சமய மரபில் மனு நீதி என்பது சமயத்தின் ஒரு அங்கமாக இருக்கிறது. மனு நீதி சமய ஏற்றத்தாழ்வுகளை நியாயப்படுத்துகிறது. சமயத்தின் பெயரால்தானே தீண்டாமை இருக்கிறது....*

இப்பொழுது நம்மை ஆள்வது இந்திய அரசியல் சட்டம். மனித வாழ்வுரிமைக்கு இந்திய அரசியல் சட்டம் முழுமையாகப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறது. இன்றைக்கு எல்லோரும் சமமாகப் பேருந்தில் பயணம் செய்ய முடிகிறது. புகைவண்டியில் பயணம் செய்ய முடிகிறது. சட்டம் சாதிப்பதைவிட அறிவியல் தொழில்நுட்ப சாதனங்களை மக்கள் பயன்படுத்த வேண்டிய சூழலில் நாம் அறியாமலேயே அவைகள் சாதித்திருக்கின்றன. ஒரு காலத்தில் தெருவில் நடந்துபோக மிதியடி அணிய முடியாதது. மேல்சட்டை அணியமுடியாதது என்ற கொடுமைகள்

அகற்றப்பட்டு இன்றைக்குப் பேருந்தில் கூட சமமாகப்பயணம் செய்ய முடியும் என்பதை அறிவியல் தொழில்நுட்பம் ஒரு புரட்சி செய்திருக்கிறது. அது வேறு விஷயம்.

ஆனால் இந்திய அரசியல் சட்டம் மனித வாழ்வுரிமைக்குப் பாதுகாப்புத்தருகிறது. எந்த மனிதனையும் கீழ்மைப்படுத்துவது, எந்த மனிதனையும் தரம் தாழ்த்துவது என்கின்ற கொடுமைகளை அப்புறப்படுத்துவதில் சட்டம் நிறைய சாதித்திருக்கிறது. அதை முழுமையாக சரியாக பயன்படுத்தவேண்டும். அதை சரியாக பயன்படுத்தாதன் விளைவுதான் இந்தக் கொடுமைகள் இன்னும் தொடர்வதற்கான காரணம்.

❖ *இந்திய அரசியல் சாசனம் அனைவருக்குமான வாய்ப்புகளை வழங்கினால் ஆகம விதிகளின் பெயரால் நடைபெறுகின்ற தீண்டாமையை சில நேரங்களில் நீதிமன்றங்களே நியாயப்படுத்துகிறது.*

மனித வாழ்வியல் உரிமை அதாவது மனிதர்களுக்குத் தரப்படுகிற சம அந்தஸ்து கல்வியாக அரசியல் ரீதியாக அல்லது வேறு எல்லா உரிமைகளின் வாயிலாக தரப்படுகிற சமூக அந்தஸ்துகளில் சட்டம் முழுமையான பாதுகாப்புத் தருகிறது. எவரும் இந்த நாட்டில் ஜனாதிபதியாகலாம். அதற்கு பிறப்பு ஒரு தடையல்ல. அதேபோல சமயத்தின் எல்லைக்குள் பெரும்பாலும் மனித உரிமை பேசப்படுகிறது. எல்லோரும் அர்ச்சகராகலாம் என்ற சட்டத்தை நம்முடைய மகா சன்னிதானம் குன்றக்குடி அடிகளார் அவர்கள் தமிழக சட்டமன்றத்தில் சட்டமாகக் கொண்டு வந்தார்கள். பிறகு அது நீதிமன்றத்தின் வாயிலாகத் தடுக்கப்பட்டுவிட்டது. எனவே மனித உரிமைக்காக சமய உலகம் தொடர்ந்து போராடிக்கொண்டிருக்கிறது. சமயத்தின் பெயரால் மக்களை கீழ்மைப்படுத்துவதை எதிர்ப்பதை தீண்டாமை ஒழிப்பை மக்கள் இயக்கமாக மாற்றுவதன் மூலமே நடைமுறைப்படுத்த முடியும்.

குறிப்பிட்ட ஆலயங்களில் மட்டும்தான் குறிப்பிட்ட இடத்திற்கு அப்பால் எல்லாரும் போக முடிகிறது. ஆனால் புதிதாக உருவாகும் ஆலயங்களில் யார் வேண்டுமானாலும் அர்ச்சகராக இருக்க முடியும். ஏற்கனவே உள்ள பிரதானமாக வரையறுக்கப்பட்ட கோவில்களில் வரையறைக்குள் உள்ளவர்கள் மட்டும் அதுவும்கூட சமயப் பழக்கம் என்ற வகையில்தான் அது பாதுகாக்கப்படுகிறது. ஆனால் அதற்கப்பால் வருகிறபோது நாம் சொன்னதுமாதிரி பங்காரு அடிகளார் கோவிலில் அவர் பூஜிக்கிறார். அப்படி ஒருவரே புதிதாக தோற்றுவிக்கப்பட்ட ஆலயத்தில் அவரவர்களே பூஜிக்கிறார்கள்.

அந்த ஆலயத்துக்குள் ஆண்டவன் என்னை விரும்பலைனா நரன் மக்களுக்கான ஆலயத்தை எழுப்புவேன் என்று பெரியார் சொன்னார். நாராயணகுரு சொன்னார் உங்களுடைய ஆலயத்துக்குள் நாங்கள் வரவில்லை நாங்கள் எங்களுடைய ஆலயத்தை எழுப்புகிறோம் என்று. கோவிலுள்ள இன்னவருக்கு இன்ன இடம் என்கின்ற மேலாதிக்கத்திற்குக் காரணம் தங்களின் இடம் பறிபோய்விடுமோ என்ற குறுகலான எண்ணமே ஒழிய வேறு எந்த காரணமும் இல்லை.

❖ *ஜோதிடம் போன்ற வெறும் நம்பிக்கை சார்ந்த விஷயங்களைக் கல்விக்குள் கொண்டு வருவதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

ஜோதிடம் என்பதைப்பற்றி பல கருத்துக்கள் நிலவுகிறது. சோதிடம் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் இருக்கிறது. அது உண்மையான அறிவு என்பது பிறருடைய கருத்தாக இருக்கிறது. இது ஆய்வுக்குரிய பிரச்சனை. நல்ல அறிவியல்பூர்வமான சிந்தனையை உடையவர்கள் தெளிவில்லாத ஒரு கருத்தைப் பொருத்தவரை சோதிடம் என்பது ஒரு அறிவியலா, ஒரு கல்வியா, ஒரு நம்பிக்கையா என்பது விவாதத்திற்குரியது. அறிவுலக ஆராய்ச்சிக்காக அது பாடத்திட்டத்தில் வைக்கப்படுமே ஆனால் அது தவறில்லை. ஆனால் அதுவே ஒரு நம்பிக்கைக்காக வைக்கப்படுமே ஆனால் அது ஏற்புடையதல்ல. கல்வி என்கிற பொதுத்தன்மையில் எந்த ஜாதியையும் எந்த மதத்தையும் எந்த அரசியலையும் புகுத்துவது தவறானது.

❖ *இந்த தேசம் மதத்தின் பெயரால் மீண்டும் மீண்டும் கடும் நெருக்கடிகளை சந்திக்கிறது. ஒரு சமயப் பெரியவர் என்ற நிலையில் இதை எப்படி அணுகிறீர்கள்.*

பெரும்பான்மையான மக்கள் சமூகம் எல்லாம் சமய நல்லிணக்கத்திற்கு விரோதமாகவோ, பிற சமூகங்களோடு உறவு கொள்வதையோ விரும்பாதவர்களாகவோ தான் இருந்திருப்பார்கள். சமய நம்பிக்கையுடைய பெரும்பாலான மக்கள் சமய நல்லிணக்கத்தை விரும்புகிறார்கள். அதிலும் சிறுபான்மை மக்களிடம் பெரும்பான்மையானவர்கள் நல்லிணக்கத்தை விரும்புகிறார்கள். இங்கும் அங்கும் இருக்கின்ற தீவிரவாதத்தை வளர்க்கின்றவர்கள். சமயத்தின் பெயரால் அரசியல் ஆக்குகிறவர்கள் வேண்டுமானால் இதுபோன்ற பகைமைகளை வளர்ப்பதை செய்துவருகிறார்கள்.

சமயத்தை வாழ்க்கைக்காக சிந்திப்பவர்கள். வாழ்க்கை என்ற வரையறைக்குள் சமயத்தை வைத்திருப்பவர்கள் இந்த பேதங்கள் வளர்வதை ஒருபோதும் விரும்பமாட்டார்கள். இந்த பேதங்களற்ற சமுதாயத்தை வளர்ப்பதுதான் இன்றையக் காலத்தேவை. இந்தியாவைப் பொறுத்தவரை வேறுபட்ட மொழிகள் வேறுபட்ட மாநிலங்கள், வேறுபட்ட ஜாதிகள் இருக்கிறதென்றால் இதற்குக் காரணம் பெரும்பாலான மக்களின் சகிப்புத்தன்மை, சமய நல்லிணக்கம் மக்களுக்குள் புதைந்துகிடக்கிற மனித நேயம். அதனால் மட்டுமே இந்தியா வாழ்ந்து கொண்டிருக்கிறது. பாரதி சொன்னதைப்போல எல்லாரும் ஓர் குலம், எல்லாரும் ஓர் நிறை, எல்லோரும் ஓர் விலை, இந்த நல்லிணக்கத்தை எந்தச் சூழலிலும் சிதைத்துவிடமுடியாது. தீவிரவாதத்தை விரும்பாத மக்களே இந்திய மக்கள். முழுமையான இந்திய சமூகத்தையும் தீவிரவாதத்திற்கு ஆட்படுத்திவிட முடியாது. ஒருமைப்பாடு எதிர்காலத்தில் கனிந்து வளர்வதற்கான வாய்ப்பு இருக்கிறதே ஒழிய மாறுபடுவதற்கு வாய்ப்பில்லை. மாறுபாடான வாய்ப்புகள் தாமாகவே குறைந்துவிடும் என்பதுதான் நம்முடைய நம்பிக்கை.

(முற்றும்)



# எங்கள் சிவபெருமான்

(வித்துவான் **க. கதிரேசன்** எம்.ஏ.பி.எட்.,)

முன்னுரை

நம் தமிழ்ச்சமுதாயம் செய்தவப் பயனாய், சென்ற 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாம்பனில் ஒளிவீசி எழுந்த எழுஞாயிறு, ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள், "தவத்திரு குன்றக்குடி அடிகளார்" என்று ஊர்ப்பெயருடன் இணைத்துப் போற்றப்பெற்றவர்கள் நம் வணக்கத்துக்குரிய 45 ஆம் குருமகாசந்நிதானம் அவர்கள். அதுபோலவே இச்சுவாமிகளும் இவர்கள்பிறந்த ஊர்ப்பெயருடன் இணைத்துப் "பாம்பன் சுவாமிகள்" என்றே போற்றப்பெறுகிறார்கள. இவர்கள் முருகப்பெருமான் மீது பாடியருளியுள்ள பாக்கள் மட்டும் 6666 என்பர். இவை அன்பெனும் கண்ணீரதனால் நனைந்து நனைந்து, உருகி உருகிப் பாடப்பெற்றனவாதலின் நம்மையும் அங்ஙனம் நெகிழச்செய்வன. இவர்களது திருப்பாடல்களுள் 17ஆவது பதிகமாக அமைந்து பத்துப்பாடல்களைக் கொண்டது "திருக்குன்றக்குடிப் பதிகம்". இது நினைத்தொறும், காண்தொறும், பேசுந்தொறும் எப்போதும் அனைத்து என்பு உருக ஆனந்தத் தேன் சொரிவது. உயர்நோக்கும் கருத்தும் கொண்ட இப்பதிகத்துச் செய்திகள் சிலவற்றைச் சிந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

ஆறுபடை வீடுகளில் ஐந்தாவது படைவீடு குன்றுதோறாடல். இது, பிற ஐந்து படைவீடுகள் தவிர, முருகப்பெருமான் எழுந்தருளி அருள்பாலிக்கும் அனைத்துக் குன்று/மலைத் திருத்தலங்கள் அனைத்தையும் தன்னுள் அடக்கியது. இந்த ஐந்தாவது படைவீட்டுத் தலங்கள் அனைத்திலும் முந்தியது திருக்குன்றக்குடி என்பது ஆன்றோர் கருத்து. இதனை வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள்,

"குன்றுதோ றாடலின் முந்தியதாகிய குன்றக்குடியானே"
-குன்றக்குடிக் கலம்பகம்

என்று கூறி வலியுறுத்துகிறார்.

முந்துதலாவது முதலாவதாக வைத்து எண்ணப்பெறுதல். இங்கு எழுந்தருளியுள்ள பெருமான் வழங்கும் அருளாற்றலால் முதலாவதாக வைத்து எண்ணப்பெறுதல். ஐந்தாவது படைவீட்டில் பெறும் இடத்தால் முதலாவதாக எண்ணப்பெறுதல் என்பன முந்தியது என்பதன் விளக்கம்.

"முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலங்களுள் மலை/கிரி/குன்று என்றும் சொல்லை முதலாவதாகக் கொண்டமைந்த திருத்தலம் இக்குன்றக்குடியே" என்று இத்தலத்தின் சிறப்பினை, தமிழாகரர் தெ. முருகசாமி ஐயா அவர்கள் கூறுவது எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

இத்திருத்தலத்தில் ஆறுமுக அப்பன், கருணை கூர் முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டும் கொண்டு ஒருதிரு முருகனாக எழுந்தருளி அருள்பாலிக்கிறான். தன்னை வணங்குகின்றவர்களுக்கு மும்மையிலும் அருள்புரிய முந்தும் நிலையில், இருமயில் சூழ ஒருமயில் ஏறி அமர்ந்துள்ளவன், தமது வலது திருவடியை இறக்கித் தொங்கவிட்டும், இடது திருவடியை மயில்மீது மடித்துவைத்தும், அருள்புரிய முந்தும் நிலையில் உள்ளான்.

பாம்பன் சுவாமிகள் அருளியுள்ள திருக்குன்றக்குடிப் பதிகம், "பூமுடி விண்ணவர் வாழ்வும்" என்று தொடங்குவது; "கோவே குன்றக் குடியுறை தேவே" என்று பாடல்தோறும் மகுடம் கொண்டு விளங்குவது; விளம்-விளம்-மா விளம்-விளம்-மா என்னும் கட்டளை கொண்ட அறுசீர் விருத்தங்களாக அமைந்தது. அறுமுக அப்பனுக்கு அறுசீர் விருத்தம் மிகப்பொருத்தம். பாம்பன் சுவாமிகளின் திருவலங்கல் திரட்டு நூலின் முதற்காண்டத்தில் பதினேழாவதாக இப்பதிகப்பாடல்கள் பத்தும் இடம்பெற்றுள்ளன. இப்பதிகம் மன்மத ஆண்டு (கி.பி. 1895) ஆடித்திங்கள் 3ஆம் நாள் புதன்கிழமை பாடப்பெற்றது என்பது இதன் அடிக்குறிப்பால் அறிகிறோம்.

*சிவமே முருகன்*

சிவபெருமான், ஐந்து முகத்தோடு அதோமுகமும் தந்து திருமுகங்கள் ஆறுஆகிச் செந்தழற்கண் ஆறும் ஒருமுகமாய்த் தீப்பொறி ஆறு உய்ப்ப அருள்தரு சண்முகநாதப் பெருமானாக வந்தான். சிவபரம்பொருள் வேறு; இவன் வேறல்லன்; சிவனே

இவன்; இவனே சிவன் இதனைக் கச்சியப்ப சிவாசாரியார், சிவபெருமானே கூறுவதாக

"ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் நாமும்
பேதகம் அன்றால்"

-திருவிளையாட்டுப்படலம்.19

என்று கூறுகிறார்.

சிவபெருமானே அறுவகைச் சமயங்களிலும் நின்று, ஓர்க்கின்ற அனைவர்க்கும் அவரவர் பொருளாக - இறைவனாக - விளங்கி அருள்புரியும் பாங்கினை,

"அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுஆம்
குறியது உடைத்தாய்"

-சித்தியார்பாயிரம்.1

என்று அருள்நந்தி சிவனார், சிவபெருமானின் தன்மையைச் சுருங்கச் சொல்கிறார். இவ்வகையில் முருக வழிபாட்டினை வலியுறுத்தும் கௌமார சமயத்து வழிபடு தெய்வமாகிய அருள்தரு சண்முகநாதப்பெருமான் சிவபெருமானே என்பதை

"தோகை மயிற்பரி யானே
இற்றைஎ னக்கருள் வோனே எங்கள் சிவபெரு மானே"

-பா.10

எடுத்துக்கூறிப் போற்றுகின்றார் சுவாமிகள்.

இதிலமைந்துள்ள எங்கள் என்னும் தன்மைப் பன்மைப் பெயர். இத்திருப்பாடலை/பதிகத்தைக் கூறுகின்ற அனைவரையும் உள்ளடக்கி குறிப்பதை அறியலாம்.

*சாமியும் நீ*

உயிரினங்கள், தாம் தாம் பெற்றுள்ள உடம்புகளின் மூலமே அறிவையும் அனுபவத்தையும் பெறுதற்குரியன. உடம்பு என்பது, நிலம், நீர், தீ, வளி, விண் என்னும் ஐம்பூதக் கூட்டுறவால் அமைந்தது. உடம்புகள் மட்டுமன்றி உலகப் பொருள்கள் அனைத்துமே ஐம்பூதக் கலப்பால், மயக்கத்தால் ஆனவை என்பார் தொல்காப்பியர்.

"நிலம்தீநீர்வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்"

-தொல். 1589

என்பது தொல்காப்பியம். இனி; இவ்வைம்பூதங்கள், உயிரின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் உதவுகின்ற ஞாயிறு, திங்கள், இவை ஏழின் மூலமும் பயனடையும் உயிர் ஆக எட்டுமாக இறைவன் விளங்குகின்றான். காரைக்கால் அம்மையார்,

"அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல்காற் றாவான் - அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றாலும் வந்து"

-அற்புதத்திருவந்தாதி.21

என்றும்,

மாணிக்கவாசகர்,

"போற்றிநின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனம்நீர்தீ
காற்றுஇய மானன்வானம் இருசுடர்க் கடவுளானே.."

-திருச்சதகம் 63

என்றும் கூறுவதைப்போல ஸ்ரீகுமரகுருபர அடிகள், முருகப் பெருமானை அயன் சிவனே ஆதலால்

"வரும்சுட்ட மூர்த்தமாம் வாழ்வே மெய்ஞ்ஞானம்
தரும் அட்ட யோகத் தவமே"

-கந்தர்கலிவெண்பா கண்ணி.65

என்றும் போற்றுகின்றார்.

பாம்பன் சுவாமிகள்,

"எட்டுருத் தெய்வமும் நீயே எட்டுக்கு அதீதமும் ஆயே
தட்டுப் படாதஅு தீத சாமியும் நீ"

-பா.6

என்று எண்ணிப் போற்றுகிறார்.

ஐம்பூதங்களும், இருசுடரும் நம் பொறி புலன்களுக்குத் தட்டுப்படுவன. இவைகளாக விளங்கும் பெருமான், பொறிபுலன்களுக்குத் தட்டுப்படாத நிலையிலும் உள்ளவன். அதாவது அவற்றினும் அதீதன் - மேம்பட்டவன் அதீதனாகிய அவனே - மேம்பட்டவனாகிய அவனை "சாமி" என்கிறார். சாமி என்னும் சொல்; தலைவன், குரு, ஞானி என்னும் பொருள் தருவது.

அண்டங்களுக்கும் தேவர்க்கும் மூவர்க்கும் தலைவனாகவும், சிவத்துக்குப் பிரணவம் பொருள் உரைத்த குருவாகவும், ஞான பண்டிதனாகவும் விளங்கும் குன்றக்குடியானைச் "சாமி" என்றும் ஒரே சொல்லால் உணர்த்துகிறார். காரைக்கால் அம்மையார், "ஞானமயன்" என்று குறிப்பிட்டதைப் பாம்பன் சுவாமிகள் "சாமி" என்றும் ஒரு சொல்லால் குறிக்கிறார்.

## கோவும் தேவும்

இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் "கோவே குன்றக்குடியுறை தேவே" என்னும் மகுடம் கொண்டவை என்பது முன்னர்ச் சுட்டப்பெற்றது. பிள்ளைத்தமிழ், பதிகம் போன்றவற்றில் மகுடமாக அமையும் தொடர்கள் சிறப்புடையன என்பது மரபு.

தேவர்கள், இந்திரன், அயன், மால் முதலியோர் தெய்வமாகக் கருதப்பெறும் மரபு நமக்கு இல்லை. நம் மெய்ப்பொருள் இயலார் இவர்களை மேம்பட்ட பசுவர்க்கமாகவே - உயிராகவே - கூறுவர்.

இவர்களைத் தெய்வமாகப் போற்றுவது ஆரிய மரபு. இவர்கள் செத்துப் பிறக்கின்றவர்கள். சாதலும் பிறத்தலும் இன்றி ஒரு தன்மையினனாய் நிற்கும் முருகனே இவர்களது நன்னிலையை - பதவிகளை (இந்திர பதவி, பிரமபதவி, திருமால் பதவி முதலியன) ஆள்கின்றவன், எனவே முருகனே இவர்கட்கு எல்லாம் மணவாளன் என்கிறார் ஸ்ரீ குமரகுருபர அடிகள்.

"செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள"

என்பது ஸ்ரீ முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் செங்கீரைப் பருவத்துமுதல் ஐந்து பாடல்களில் அமைந்துள்ள மகுடம் ஆகும். மணம்=நன்னிலை. மணவாளன் = பிறர் நன்னிலைகளை ஆள்கிறவன் என்பது பொருள்.

குன்றக்குடியானைக் குறிக்கும் பாம்பன் சுவாமிகள் இவன், மனிதர், நரகர், தேவர், அயன், அரி முதலிய உயிர் வருக்கங்களுக்கெல்லாம் கோ - தலைவன் - மட்டுமல்லன்; அவனே தெய்வமும் ஆவான்; அவன் குன்றக்குடியில் எழுந்தருளி அருள்பாலிக்கிறான் என்கிறார்.

(தொடரும்)

# பெங்களூர்த் தமிழ்ச்சங்கம் 54 ஆம் ஆண்டுவிழா

பெங்களூர்த் தமிழ்ச் சங்கத்தின் 54-ஆம் ஆண்டுவிழா 18-4-2004 ஞாயிற்றுக்கிழமை காலை மற்றும் மாலை இருவேளைகளிலும் சிறப்பான முறையில் நடைபெற்றது.

இவ்விழா நிகழ்ச்சிகளில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் குருமகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

18-04-2004 காலை 10 மணியளவில் குருமகா சந்நிதானம் அவர்களை தமிழ்ச்சங்க வாயிலில் பூர்ணகும்ப மரியாதையுடன் சங்கத்தலைவர் புலவர் திரு. க. சுப்பிரமணியன், செயலர், திரு. தி.கோ.தாமோதரன், துணைச்செயலர், திரு. ந.விவேகானந்தன் மற்றும் சங்க உறுப்பினர்கள், குழந்தைகள் ஆகியோர் வரவேற்றனர். காலைநிகழ்ச்சி சான்றோர் படத்திறப்பு விழாவில் அருள்தரு "குமரகுருபர சுவாமிகளின்" திருவுருவப் படத்தை குருமகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் திறந்து வைத்து சிறப்புச் செய்தார்கள்.

இந்நிகழ்ச்சியில் அருள்திரு சிவப்பிரகாச சுவாமிகள் திருவுருவப் படத்தை, கோவை பேரூர் ஆதீனம் இளையபட்டம் தவத்திரு மருதாசல அடிகளார் அவர்கள் திறந்துவைத்து சிறப்புச் செய்தார்கள்.

மாலை நிகழ்ச்சி நூல் வெளியீட்டு விழாவில் குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் "சான்றோர் பார்வையில் சங்கம்" என்ற நூலை வெளியிட்டும் விழாவின் நிறைவுப் பேருரையாக "பல்துறைத் தமிழ்" என்ற தலைப்பில் பேருரையாற்றியும் சிறப்பித்தார்கள்.

18-4-2004 காலை 9.00 மணியளவில் பெங்களூர் மணிவாசகர் அறமனை நூலகத்திற்கு குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி அன்பர்களுடன் சிறப்பு வழிபாடு செய்து கொண்டு அனைவருக்கும் நல்லாசி வழங்கினார்கள். அறமனை வரவேற்பு நிகழ்ச்சியை திரு. சீனிவாசன் அவர்களும், திரு. நரசிம்மன் அவர்களும் குறைந்த கால அளவிலும் நன்முறையில் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

-தொகுத்து எழுதியவர் : சு. செல்வராஜ்

---

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப்பெருமான் விசாகவிழா தாரண ஆண்டு வைகாசி 19ல் (1-6-2004) செவ்வாய்க்கிழமை சிறப்பாக நடைபெறும். அன்பர்கள் கலந்து கொண்டு அருள்பெற வேண்டுகிறோம்.

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

# மணிவாசகர் பதிப்பகத்தின்

## தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

**7200 - பக்கங்கள் - 16 தொகுதிகள்**

| | |
|---|---|
| திருக்குறள் - தொகுதி I | 75-00 |
| திருக்குறள் - தொகுதி II | 65-00 |
| திருக்குறள் - தொகுதி III | 100-00 |
| திருக்குறள் - தொகுதி IV | 75-00 |
| இலக்கியம் - தொகுதி V | 75-00 |
| இலக்கியம் - தொகுதி VI | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VII | 80-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VIII | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி IX | 75-00 |
| சமயம் - தொகுதி X | 90-00 |
| சமயம் - தொகுதி XI | 100-00 |
| சமயம் - தொகுதி XII | 125-00 |
| பொது - தொகுதி XIII | 140-00 |
| பொது - தொகுதி XIV | 125-00 |
| பொது - தொகுதி XV | 120-00 |
| பொது - தொகுதி XVI | 140-00 |



**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை
சென்னை - 600 108.

பதிவு எண்: TN/SP/KKD/-01/2003-2005 மக்கள் சிந்தனை/மே-2004, வெளியீட்டுநாள் 20.5.2004






பெறுநர்
ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர் - (Post)
காரைக்குடி - (Via)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166